சகல ஐஸ்வர்யங்கள் தரும்



# மகா பிரதோச வழிபாடு





# சகல ஐஸ்வர்யங்கள் தரும் மகா பிரதோச வழிபாடு

தொகுப்பாசிரியர்:-
N. கிருஷ்ணமூர்த்தி

✆ : 423816

பாலாஜி நோட் புக்ஸ்,
636, பராசக்தி காலனி,
சிவகாசி.

விலை ரூ 10-00

# பொருளடக்கம்

பக்கம்

# 1. பிரதோஷ வரலாறு

இந்திராதி தேவர்கள், திருப்பாற்கடலையடைந்து பாற் கடலைக் கடைய முயன்றார்கள். மந்திரகிரியை மத்தாகவும், சந்திரனை தறியாகவும் 'வாசுகி' என்ற நாகராஜனைத் தாம்புக் கயிறாகவும் அமைத்தார்கள் . திருமால் கூர்மமாகி மந்திரகிரியைத் தனது முதுகில் தாங்கினார். அசுரர்கள் தலைப்புறமும் தேவர்கள் வால்புறமும் நின்று கடையலானர்கள்.

அந்த நர்ள் தசமி திதி. அன்று ஒரு வேளையுண்டு, திருப்பாற் கடலைக் கடைந்தார்கள். மறுநாள் ஏகாதசி பதினோராவது திதி.

பாற்கடலைக் கடைந்தபோது 'வாசுகி' வருத்தந் தாங்காது பதைபதைத்து நஞ்சை உமிழ்ந்தது. கடலில் இருந்தும் நஞ்சு தோன்றியது. வாசுகி கக்கிய ஆலமும், கடலில் தோன்றிய ஆலமும் ஒன்று சேர்ந்து 'ஆலாலம்' எனப் பேர் பெற்றது.

இந்த ஆலாலம் மிக்க பயங்கரமாக, வெப்பமுடன் உலகத்துக்கே முடிவு செய்வது போல் விண்ணவரை விரட்டியது. வலமாகவும், இடமாகவும் மறித்துத் துரத்தியது. திசை தோறும் தேவர்கள் நடுங்கி ஒடுங்கி ஓடினார்கள்.

வெண்ணிறமாக இருந்த விஷ்ணுமூர்த்தி விஷவேகத்தால் நீலநிறம் ஆனார். வானவர்கள் அஞ்சி திருக்கயிலாயஞ்சென்று அர னாரிடம் அடைக்கலம் புகுந்தார்கள்.

தஞ்சம் புகுந்த வானவர்கள் ''தேவ தேவ மஹாதேவ அருட் கடலே! கருணைக் குன்றே! தேவரீர் ஆண்டான்! நாங்கள் அடிமைகள். தேவரீர் உடையவர். நாங்கள் உடைமைகள் நாங்கள் பாற்கடல் கடைந்தோம். அந்த விவசாயத்தில் முதலில் விளைந்தது தேவரீருக்கு உரியது'' என்று கூறி முறையிட்டார்கள்.

ஓலமிட்ட வண்ணம் இடமாகவும், வலமாகவும், இட வலமாகவும் அவர் சந்நிதி முன்னுற்ற நந்திதேவரது அண்டத்தில் ஒளிந்தனர்.

அண்ட சராசரங்களும் சகல தேவர்களும் சிவபெருமானை ஏகச்சிந்தனையாகத் தங்களைத் காத்தருளக் கோரித் துதித்த நேரமே பிரதோஷ கால நேரமாகும்.

கருணையே வடிவான கண்ணுதற் கடவுள் தமது அருகில் நிற்கும் சுந்தரரைப் பார்த்து, "சுந்தரா! அவ்விடத்தை இவ்விடத்துக்குக் கொணர்வாய்" என்று பணித்தருளினார்.

சுந்தரர் மாலயனாகி வானவர்களால் அணுகமுடியாத அதி பயங்கரமான கொடிய விஷத்தை நாவல்பழம் போலத் திரட்டி உருட்டிக் கொணர்ந்து சிவபெருமானிடம் தந்தார்.

கருணாமூர்த்தியான சிவபெருமான் நந்திதேவரின் கொம்பின் நடுவில் தோன்றி அக்கொடிய விடத்தை அடியார்களாகிய அமரர்கள் உய்ய அமுதம் போல் உண்டு அருளினார். அந்த விடம் உள்ளே சென்றால், உள்முகத்தில் உள்ள ஆருயிர்கள் அழிந்துவிடும். ஆதலால் உண்ணாமலும், உமிழாமலும கண்டத்தில் தரித்தருளினார். அதனால் செம்மேனி எம்மானுடைய கண்டம் கரியதாயிற்று. அதனால் 'மணிகண்டர்', 'நீலகண்டர்' என்று பேர் பெற்றார். இது கார்த்திகை மாதச் சனிப் பிரதோஷ காலமாகும். இக்கதை கடம்பவன் புராண மென்னும் மதுரை ஸ்தல புராணத்தில் உள்ளதாகும்.

சிவபெருமானுடைய கருணைக்கு உதாரணம் இது ஒன்று போதாதா? என்று "நாலம் வா" என்று ஒரு பாடலை ஆதிசங்கரர் சிவானந்தலகரியில் பாடியருளினார்.

இவ்வாறு எம்பெருமான் நஞ்சுண்டருளிய கருணைத் திறத்தை நால்வர்களும் மற்றைய ஆன்றோர்களும் புகழந்து கூறியிருக் கிறார்கள்.

இறைவன் ஆலால விஷத்தை உண்ணவில்லையானால் பிரம விஷ்ணு இந்திராதி தேவர்கள் அன்றே மாண்டிருப்பார்கள். எல்லோருடைய கண்டத்தையும் எந்தைபிரான் கண்டந் தீர்த்தது.

"மாலெங்கே? வேந்தனுயர் வாழ்வெங்கே? இந்திரன் செங்கோலெங்கே! வானோர் குடியெங்கே? கோலஞ் செய் அண்டங்கள் எங்கே? எந்தை பிரான் கண்டமங்கே

நீலமுறாக்கால்?" என்கிறார் வடலூர் வள்ளலார்.

"பரவி வானவர் தானவர் பலரும்
கலங்கிட வந்த விடம்
வெருள உண்டு கந்த
அருள் என் கொல்? விண்ணவனே
கரவின் மாமணி பொன் கொழித்திழி
சந்து காரகில் தந்து பம்பை நீர்
அருவி வந்தலைக்கும் .
ஆமாத்தூர் அம்மானே" - திருஞானசம்பந்தர்

இந்த விடத்தின் வெம்மையால் திருமால் நீலநிறம் பெற்றார். அதற்கு முன் அவர் வெண்ணிறமுடன் இருந்தார் என்பதை பின்வரும் பாடல்களால் அறிக.

மலை வளர் சிறகு கண்டேன்
வாரிதி நன்னீர் கண்டேன்
சிலை மதன் உருவு கண்டேன்
சிவன் சுத்த களம் கண்டேன்
அலை கடல் கடையக் கண்டேன்
அயன் சிரம் ஐந்துங் கண்டேன்
சிலை எரிஇரு கண் கண்டேன்
கொடுத்ததை வாங்கக் கண்டேன்

இந்த கருத்தை வலியுறுத்தும் வடமொழிப் பாடல் ஒன்று காண்க.

"இந்த்ரம் த்வயஷம் அமந்த
பூர்வ முதிதம் பஞ்சானனம் பத்மஜம்
வார்திம் சுத்த ஜலம் சிவம் சித களம்
லட்சுமிபதிம் பிங்களம்
சைலான் பக்ஷகதரான ஹயான பிததா
காமஞ்ச சத்விக்ரகம்
சர்வம் த்ருஷ்டம் இதம்மயா ரகுபதே
தத்தா பஹாரம் விநா"

இவ்வாறு தேவர்கள் பொருட்டு சிவபெருமான் ஆலால விஷத்தை உண்டாருளியது ஏகாதசி மாலை நேரமாகும்.

# 2. மீண்டும் பாற்கடல் கடைந்தது

சிவபெருமான் தேவர்களை நோக்கி மீண்டும் சென்று திருப்பாற் கடலைக் கடையுமாறு பணித்தருளினார். அமரர்களும் அசுரர்களும் மீண்டும் கடலருகில் சென்று நின்று முன்போலவே கடலைக் கடையத் தொடங்கினார்கள்.

பாற்கடலிலிருந்து இலக்குமி, ஐராவதம், காமதேனு கற்பகத்தரு, சிந்தாமணி, கௌஸ்துபமணி, சூடாமணி, உச்சைச்ரவம் முதலியன ஒவ்வொன்றாகத் தோன்றின. இலக்குமியைத் திருமால் ஏற்றுக் கொண்டார். ஏனைய பொருட்களை இந்திராதி தேவர்கள் அடைந்தார்கள்.

ஏகாதசியாகிய அன்று இரவு முழுவதும் உறக்கம் இன்றி பாற்கடலைக் கடைந்தார்கள். மறுநாள் துவாதசியன்று அதிகாலை யில் அமிர்தம் தோன்றியது. அதனை, தேவர்கள் பகிர்ந்து உண்டார்கள். அமிர்தம் உண்ட அவர்கள் அந்த மகிழ்ச்சியினால் துவாதசியன்று ஆடியும் பாடியும் பொழுதைப் போக்கினார்கள்.

## *பிரதோஷம்*

மறுநாள் திரயோதசி பதிமூன்றாம் நாள் தேவர்கள் சிவ பெருமானை முன்னாலே வணங்காது பொழுது போக்கிய தங்கள் குற்றத்தை உணர்ந்து சிவபெருமானிடம் பணிந்து தங்கள் குற்றத்தை மன்னித்தருளுமாறு வேண்டினார்கள்.

பரமகருணாநிதியாகிய சிவபெருமான் மகிழ்ந்து தேவாகளுக்கு அருள்புரியத் திருவுளம் கொண்டு கயிலையில் அன்று மாலை (4.30 மணிமுதல் 6.00 மணிவரை)பிரதோஷ வேளையில் நந்தி தேவர் இரு கொம்புகளுக்கிடையில் நின்று அம்பிகை காணத் திருநடம் செய்தருளினார். தேவர்கள் அதனைத் தரிசித்து சிவபெருமானைத் துதி செய்து வணங்கி னார்கள் அது முதல் திரயோதசி திதியன்று மாலை நேரம் பிரதோஷ வேளை பாபத்தைப் போக்கும் நேரமாயிற்று.

நீலமுறாக்கால்?'' என்கிறார் வடலூர் வள்ளலார்.

''பரவி வானவர் தானவர் பலரும்
கலங்கிட வந்த விடம்
வெருள உண்டு கந்த
அருள் என் கொல்? விண்ணவனே
கரவின் மாமணி பொன் கொழித்திழி
சந்து காரகில் தந்து பம்பை நீர்
அருவி வந்தலைக்கும் .
ஆமாத்தூர் அம்மானே'' - திருஞானசம்பந்தர்

இந்த விடத்தின் வெம்மையால் திருமால் நீலநிறம் பெற்றார். அதற்கு முன் அவர் வெண்ணிறமுடன் இருந்தார் என்பதை பின்வரும் பாடல்களால் அறிக.

மலை வளர் சிறகு கண்டேன்
வாரிதி நன்னீர் கண்டேன்
சிலை மதன் உருவு கண்டேன்
சிவன் சுத்த களம் கண்டேன்
அலை கடல் கடையக் கண்டேன்
அயன் சிரம் ஐந்துங் கண்டேன்
சிலை எரிஇரு கண் கண்டேன்
கொடுத்ததை வாங்கக் கண்டேன்

இந்த கருத்தை வலியுறுத்தும் வடமொழிப் பாடல் ஒன்று காண்க.

''இந்த்ரம் த்வயஷம் அமந்த
பூர்வ முதிதம் பஞ்சானனம் பத்மஜம்
வார்திம் சுத்த ஜலம் சிவம் சித களம்
லட்சுமீபதிம் பிங்களம்
சைலான் பக்ஷகதரான ஹயான பிததா
காமஞ்ச சத்விக்ரகம்
சர்வம் த்ருஷ்டம் இதம்மயா ரகுபதே
தத்தா பஹாரம் விநா''

இவ்வாறு தேவர்கள் பொருட்டு சிவபெருமான் ஆலால விஷத்தை உண்டாருளியது ஏகாதசி மாலை நேரமாகும்.

# 2. மீண்டும் பாற்கடல் கடைந்தது

சிவபெருமான் தேவர்களை நோக்கி மீண்டும் சென்று திருப்பாற் கடலைக் கடையுமாறு பணித்தருளினார். அமரர்களும் அசுரர்களும் மீண்டும் கடலருகில் சென்று நின்று முன்போலவே கடலைக் கடையத் தொடங்கினார்கள்.

பாற்கடலிலிருந்து இலக்குமி, ஐராவதம், காமதேனு கற்பகத்தரு, சிந்தாமணி, கௌஸ்துபமணி, சூடாமணி, உச்சைச்ரவம் முதலியன ஒவ்வொன்றாகத் தோன்றின. இலக்குமியைத் திருமால் ஏற்றுக் கொண்டார். ஏனைய பொருட்களை இந்திராதி தேவர்கள் அடைந்தார்கள்.

ஏகாதசியாகிய அன்று இரவு முழுவதும் உறக்கம் இன்றி பாற்கடலைக் கடைந்தார்கள். மறுநாள் துவாதசியன்று அதிகாலை யில் அமிர்தம் தோன்றியது. அதனை, தேவர்கள் பகிர்ந்து உண்டார்கள். அமிர்தம் உண்ட அவர்கள் அந்த மகிழ்ச்சியினால் துவாதசியன்று ஆடியும் பாடியும் பொழுதைப் போக்கினார்கள்.

## *பிரதோஷம்*

மறுநாள் திரயோதசி பதிமூன்றாம் நாள் தேவர்கள் சிவ பெருமானை முன்னாலே வணங்காது பொழுது போக்கிய தங்கள் குற்றத்தை உணர்ந்து சிவபெருமானிடம் பணிந்து தங்கள் குற்றத்தை மன்னித்தருளுமாறு வேண்டினார்கள்.

பரமகருணாநிதியாகிய சிவபெருமான் மகிழ்ந்து தேவர்களுக்கு அருள்புரியத் திருவுளம் கொண்டு கயிலையில் அன்று மாலை (4.30 மணிமுதல் 6.00 மணிவரை)பிரதோஷ வேளையில் நந்தி தேவர் இரு கொம்புகளுக்கிடையில் நின்று அம்பிகை காணத் திருநடம் செய்தருளினார். தேவர்கள் அதனைத் தரிசித்து சிவபெருமானைத் துதி செய்து வணங்கி னார்கள் அது முதல் திரயோதசி திதியன்று மாலை நேரம் பிரதோஷ வேளை பாபத்தைப் போக்கும் நேரமாயிற்று.

பிரதோஷ விரதம் சிவமூர்த்திக்கு உரிய பலவித விரதங்களில் தலையாயது. இவ்விரதத்தை அனுஷ்டிப் போர் துன்பங்களில் நின்றும் நீங்கி இன்பத்தை எய்துவார்.

### விரதம் அனுஷ்டிக்கும் முறை

வளர்பிறை தேய்பிறை என்ற இரண்டு பட்சங்களிலும் வரும் திரயோதசி திதியன்று அதிகாலையிலும் எழுந்து நீராடிய, நித்திய கடன்களை முடிக்கவேண்டும். சிவாலயம் சென்று வழிபட வேண்டும். அன்று முழுவதும் உணவின்றி உபவாசமது இருக்கவேண்டும். திருமுறைகளை ஓத வேண்டும். பிரதோஷ நேரம் மாலை 4.30 முதல் 6 மணி வரை. இந்நேரத்தில் சிவாலயம் சென்று உள்ளம் உருகி ஐந்தெழுத்தை (சிவாயநம) ஓதி வழிபட வேண்டும். வசதி உள்ளவர்கள் சுவாமிக்கும் அம்பிகைக்கும் அபிஷேக ஆராதனைகள் செய்வித்தல் அவசியமாகும்.

## 3. விநாயகர் வணக்கம்

பிடியதன் உருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகு கொடை
வடிவினர் பயில்வலி வலம் உறை இறையே

- திருஞானசம்பந்தர்

கைத்தல நிறைகனி அப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணிக்
கற்றிடு மடியவர் புத்தியி லுறையவர்
கற்பக மெனவினை கடிதேகும்
மத்தமும் மதியமும் வைத்திடு மரன்மகன்
மற்பொரு திரள் புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே

முத்தமி ழடைவினை முற்படு கிரிதனில்
முற்பட வெழுதிய முதல்வோனே
முப்புர மெரிசெய்த அச்சிவ னுறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா
அத்துய ரதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புன மதனிடை இபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கண மணமருள் பெருமாளே
- திருப்புகழ்

திருச்சிற்றம்பலம்

## 4. நந்திதேவர் வணக்கம்

(ஆடுக ஊஞ்சல் ஆடுகவே என்ற மெட்டு)

வழிவிடு நந்தி வழிவிடுவே
வாழ்வில் நாங்கள் வளர்ந்ததுயர
வழிவிடு நந்தி வழிவிடுவே
வையகம் வுளர வழிவிடுவே. (வழிவிடு)

எம்பிரான் சிவனைச் சுமப்பவனே
எல்லா நலனும் தருபவனே
ஏழைகள் வாழ்வில் இருளகல
என்றும் அருளைச் சுரப்பவனே (வழிவிடு)

நீரில் என்றும் குளிப்பவனே
நெய்யில் என்றும் மகிழ்பவனே
பொய்யில்லாத வாழ்வு தர
பொங்கும் கருணை வாரிதியே. (வழிவிடு)

உந்தன் கொம்பு இரண்டிடையே
உமையாள் பாகன் காட்சிதர
தேவர் எல்லாம் அருள் பெற்றார்
தேனாய் இனிக்கும் செய்தி அப்பா (வழிவிடு)

தேடிய பலனைத் தந்திடுவாய்
தேவர் போற்றும் நந்திதேவா
வாழ்வில் வளமே வந்துயர
வழியே காட்டி அமைந்திடுவாய் (வழிவிடு)

நந்தனார் போற்றும் நந்தி தேவா
நாலுந் தெரிந்த வல்லவனே
எம்பிரான் அருளை எமக்கருள
என்றுந் துணையாய் நிற்பவனே. (வழிவிடு)

பிரதோஷம் என்றால் உன் மகிமை
பெரிதும் வெளியில் தெரிந்திடுமே
தேவர்க்குக் காட்சி உன்மூலம்
தெரிய செய்த பெரியவனே. (வழிவிடு)

- அரு. வ. வள்ளியப்பன்

## 5. நந்திதேவர் துதி

நந்திஎம் பெருமான்தன்னை நாள்தோறும் வழிப்பட்டால்
புத்தியில் ஞானம் சேரும் புகழ்கல்வி தேடிவரும்
இவ்வுலக இன்பம்யாவும் இவரடி தொழ உண்டு!
அவ்வுலக அருளும்கூட அவர்துதி பாட உண்டு!
முற்பிறவி வினைகள்யாவும் தீயிட்ட மெழுகாகும்
நந்தியின் பார்வை பட நலங்கள்உடன் கிட்டும்!
ஈசனுக்கு எதிர் அமர்ந்து இறைஊஞ்சல் ஆட்டுவிக்கும்
நந்தீசர் நற்பாதம் நாம் தொழுவோம்!

## 6. நலம்தரும் நந்தி

கந்தனின் தந்தையைத் தான் கவனமாய்ச் சுமந்து செல்வாய்
நந்தனரா் வணங்குதற்கு நடையினில் விலகி நின்றாய்
அந்தமாய் ஆதியாகி அகிலத்தைக் காக்க வந்தாய்
நந்தியே உனைத்துதித்தேன் நாடி வந்தெம்மைக் காப்பாய்
ஒன்பது கோள்களுக்கும் உயரிய பலன் கொடுப்பாய்
பொன் பொருள் குவிய வைப்பாய் புகழையும் வளர்த்து வைப்பாய்

சிந்தனை வளங்கொடுப்பாய் சிகரத்தில் தூக்கி வைப்பாய்
நந்தியே உனைத்துதித்தேன் நாடிவந்தெம்மைக் காப்பாய்
மாலைகள் ஏற்க வைப்பாய் மழலைகள் பிறக்க வைப்பாய்
வேலைகள் கிடைக்க வைப்பாய் விதியையும் மாற்றி வைப்பாய்

சோலையின் வண்ணப் பூவைச் சூடிடும் நந்தி தேவா
நாளும் நான் உனைத் துதித்தேன் நாடி வந்தெம்மைக் காப்பாய்
தஞ்சையில் பெரிய நந்தி தளிருடல் வெண்ணை சாத்தி
அஞ்சாத வேந்தன் நந்தி அழகிய நெகமம் நந்தி
குஞ்சர முகத்தான் தந்தை குந்திடும் ரிஷப நந்தி
தஞ்சமாம் உனையடைந்தேன் தயங்காது எம்மைக் காப்பாய்

## 7. நலம் சேர்க்கும் நந்தீஸ்வரர்

சிவனாரை என்றைக்கும் சுமக்கும் நந்தி
சேவித்த பக்தர்களைக் காக்கும் நந்தி
கவலைகளை எந்நாளும் போக்கும் நந்தி
கைலையிலே நடம்புரியும் கனிந்த நந்தி

பள்ளியறைப் பக்கத்தில் இருக்கும் நந்தி
பார்வதியின் சொல்கேட்டுச் சிரிக்கும் நந்தி
நல்லதொரு ரகசியத்தைக் காக்கும் நந்தி
நாள்தோறும் தண்ணீரில் குளிக்கும் நந்தி

செங்கரும்பு உணவு மாலை அணியும் நந்தி
சிவனுக்கே உறுதுணையாய் விளங்கும் நந்தி
மங்களங்கள் அனைத்தையும் கொடுக்கும் நந்தி
மனிதர்களின் துயர் போக்க வந்த நந்தி

அருகம்புல் மாலையையும் அணியும் நந்தி
அரியதொரு வில்வமே ஏற்ற நந்தி
வரும் காலம் நலமாக வைக்கும் நந்தி
வணங்குகிறோம் எமைக்காக்க வருக நந்தி

பிரதோஷ காலத்தில் பேசும் நந்தி
பேரருளை மாந்தருக்கு வழங்கும் நந்தி
வரலாறு படைத்து வரும் வல்ல நந்தி
வறுமையினைஎந்நாளும் அகற்றும் நந்தி

கெட்டகனா அத்தனையும் மாற்றும் நந்தி
கீர்த்தியுடன் குலம் காக்கும் இனிய நந்தி
வெற்றிவரும் வாய்ப்பளிக்க உதவும் நந்தி
விதியினைத்தான் மாற்றியிட விளையும் நந்தி

வேந்தன் நகர் நெய்யினிலே குளிக்கும் நந்தி
வியக்க வைக்கும் தஞ்சாவூர்ப் பெரிய நந்தி
சேர்ந்த திருப்புன்கூரிலே சாய்ந்த நந்தி
செவி சாய்த்து அருள் கொடுக்கும் செல்வ நந்தி

கும்பிட்ட பக்தர் துயர் நீக்கும் நந்தி
குடம் குடமாய் அபிஷேகம் பார்த்த நந்தி
பொன் பொருளை வழங்கிடவே வந்த நந்தி
புகழ்குவிக்க எம் இல்லம் வருக நந்தி.

# 8. நாட்டமுள்ள நந்தி

நந்தியிது நந்தியிது நாட்டமுள்ள நந்தியிது
நந்தனுக்கு நலம்புரிந்த நலமான நந்தியிது
செந்தூரப் பொட்டுவைத்து சிலிர்த்துவரும் நந்தியிது
சிந்தையில் நினைப்பவர்க்கு செல்வம்தரும் நந்தியிது (நந்தி)

தில்லையில் நடனமாடும் திவ்யநாதன் நந்தியிது
எல்லையில்லா இன்பம்தரும் எம்பெருமான் நந்தியிது
ஒற்றை மாடோட்டியெனும் உலகநாதன் நந்தியிது
வெற்றிமேல் வெற்றிதரும் வேந்தன்நகர் நந்தியிது (நந்தி)

பச்சைக்கிளி பார்வதியாள் பவனிவரும் நந்தியிது
பார்ப்பவர்க்கு பலன்கொடுக்கும் பட்சமுள்ள நந்தியிது
சங்கம் முழங்கவரும் சங்கரனின் நந்தியிது
எங்கும் புகழ்மணக்கும் எழிலான நந்தியிது (நந்தி)

கொற்றவன் வளர்த்துவந்த கொடும்பாளூர் நந்தியிது
நற்றவர் பாக்கியத்தால் நமக்குவந்த நந்தியிது
நெய்யிலே குளித்துவரும் நேர்மையுள்ள நந்தியிது
ஈஎறும்பு அணுகாமல் இறைவன்வரும் நந்தியிது (நந்தி)

வானவரும் தானவரும் வணங்குகின்ற நந்தியிது
காணவரும் அடியவர்க்கும் கருணைகாட்டும் நந்தியது
உலகத்தார் போற்றுகின்ற உத்தமனின் நந்தியது
நகரத்தை வளர்த்துவரும் நான் மறையின் நந்தியிது (நந்தி)

# 9. நமசிவாய மாலை

*ஓம் நமசிவாயஓம் ஓம் நமசிவாயா*
*ஓம் நமசிவாயஓம் ஓம் நமசிவாயா*

ஆதியான அஞ்சிலும் அனாதியான நாலிலும்
சோதியான மூன்றிலும் சொரூபமற்ற ரெண்டிலும்
நீதியான தொன்றிலும் நிறைந்து நின்ற வஸ்துவை
ஆதியான தொன்றுமே யற்றதஞ் செழுத்துமே.

சக்தி நீ தயவு நீ தயங்கு சங்கினோசை நீ
சித்தி நீ சிவனும் நீ சிவாய மாமெழுத்து நீ
முத்தி நீ முதலும் நீ மூவரான தேவர் நீ
அத்திபுர மும்முளே யறிந்துணர்ந்து கொள்ளுமே.

ஆறு நாடு தேடினும் ஆனை சேனைதேடினும்
கோடிவாசி தேடினும் குறுக்கே வந்து நிற்குமோ
ஓடி இட்ட பிச்சையும் உகந்து செய்த தர்மமும்
சாடிவிட்ட குதிரைபோல் தர்மம் வந்து நிற்குமே.

கண்ணிலே இருப்பவனே கருங்கடல் கடந்துமால்
விண்ணில் இருப்பவனே மேவியங்கு நிற்பனே
தன்னுளே இருப்பவனே தராதலம் படைத்தவன்
என்னுளே இருப்பனே எங்குமாகி நிற்பனே.

அண்டமேழு முழலவே யனிந்தயோனி யுழலவே
பண்டு மாலயனுடன் பரந்து நின்றுழலவே
எண்டிசை கடந்து நின்றிருண்ட சக்தியுழலவே
அண்டரண்ட மொன்றதாய் ஆதி நடமாடுமே.

அகார காரணத்திலே யனேகனேக ரூபமாய்
உகார காரணத்திலே யுருத்தரித்து நின்றனன்
மகார காரணத்திலே மயங்குகின்ற வையகம்
சிகார காரணத்திலே தெளிந்ததே சிவாயமே.

பூவும் நீரும் என்மனம் பொருதுகோயில் என்னுளம்
ஆவியோடு லிங்கமா யகண்ட மெங்குமாகிலும்
மேவுகின்ற ஐவரும் விளங்கு தீப தீபமாய்
ஆடுகின்ற கூத்தனுக்கோர் அந்தி சந்தியில்லையே.

ஒன்று மொன்று மொன்றுமே யுலகனைத்து மொன்றுமே
அன்று மின்று மொன்றுமே அனாதியான தொன்றுமே
கன்றல் நின்ற செமபொனைக் களிம்பறுத்து நாட்டினால்
அன்று தெய்வ மும்முள அறிந்ததே சிவாயமே.

ஐயன் வந்து மெய்யகம் புகுந்தவாற தெங்கனே
செய்ய திங்களங்குரும்பை நீர்புகுந்த வண்ணமே
ஐயன்வந்து மெய்யகம் புகுந்து கோவில்கொண்டபின்
வையகத்தில் மாந்தரோடு வாய் திறப்பதில்லையே.

ஆதியுண்டு அந்தமில்லை யன்று நாலு வேதமில்லை
ஜோதியுண்டு சொல்லுமில்லை சொல்லிறந்ததேதுமில்லை
ஆதியான மூவரில் அமர்ந்திருந்த வாயுவும்
ஆதியன்று தன்னையும் யாரறிவாரண்ணலே.

மூன்று மூன்று மூன்றுமே மூவர் தேவர் தேடிடும்
மூன்று மஞ்செழுத்துமாய் முழங்கு மவ்வெழுத்துளே
ஈன்ற தாயும் அப்பரும் இயங்குகின்ற நாதமும்
தோன்று மண்டலத்திலே சொல்ல வெங்குதில்லையே.

கானமற்ற காட்டகத்தில் வெந்தெழுந்த நீறுபோல்
ஞானமற்ற நெஞ்சகத்தில் வல்லதேது மில்லையே
ஊனமுற்ற ஜோதியோடு உணர்வு சேர்த்தடக்கினால்
தேனதத்தினூறல் போல் தெளிந்ததே சிவாயமே.

தங்கமொன்று ரூபம்வேறு தன்மையான வாறுபோல்
செங்கண்மாலு மீசனும் சிறந்திருந்த தெம்முளே
விங்களங்கள் பேசுவாய் விளங்குகின்ற மாந்தரே
எங்குமாகி நின்ற நாமம் நாமமிந்த நாமமே.

தாய் தந்தை குருவும் நீ சகல தேவகணங்கள் நீ
சிந்தை நீ தெளிவும் நீ சித்தி முக்தி தானும் நீ
விந்தும் நீ வினையும் நீ மேலதாய வேதம் நீ
எந்தை நீ இறைவன் நீ என்னையாண்ட ஈசன் நீ

சித்தமற்று சிந்தையற்று சீவனற்று நின்றிடம்
சக்தியற்று சம்புவற்று ஜாதி பேதமற்றுநன்
முக்தியற்று மூலமற்று மூல மந்திரங்களும்
வித்தை யித்தை யீன்றவிதத்தில் விளைந்ததே சிவாயமே.

நல்லதல்ல கெட்டதல்ல நடுவில் நிற்றதொன்றுதான்
நல்லதென்ற போது நல்லதாகி நின்றபின்
நல்லதல்ல கெட்டதென்றால் கெட்டதாகு மாதலால்
நல்லதொன்று நாடிநின்று நாமஞ் சொல்லவேண்டுமே

பார்த்து நின்ற தம்பலம் பரமனாடுந் தம்பலம்
கூத்து நின்ற தம்பலம் கோரமான தம்பலம்
வார்த்தையான தம்பலம் வன்னியான தம்பலம்
சீற்றமான தம்பலம் தெளிந்ததே சிவாயமே.

விண்ணினின்று மின்னெழுந்து மின்னோடுங்குவாறு போல்
எண்ணுள் நின்று எண்ணுமீசன் என்னகத்திருக்கையால்
கண்ணினின்று கண்ணில் தோன்றும் கண்ணறி விலாமையால்
எண்ணுளின்ற என்னையும் நானறிந்ததில்லையே.

உருக்கலந்த பின்னலோ வுன்னை நானறிந்ததும்
இருக்கிலென் மறக்கிலென் இணைந்திருந்தபோதெல்லாம்
உருக்கலந்து நின்றபோது நீயும் நானும் ஒன்றலோ
திருக்கலந்த போதலோ தெளிந்ததே சிவாயமே.

சிவாய வென்ற வக்ஷரம் சிவனிருக்கு மக்ஷரம்
உபாய மென்று நம்புதற்கு உண்மையான வக்ஷரம்
கபாடமற்ற வாசலைக் கடந்து போன வாயுவை
உபாய மிட்டழைத்துமே சிவாய வஞ்செழுத்துமே.

சிவாய மஞ்செழுத்திலே தெளிந்து தேவராகலாம்
சிவாய மஞ்செழுத்திலே தெளிந்து வானமாவலாம்
சிவாய மஞ்செழுத்திலே தெளிந்து கொண்டவான் பொருள்
சிவாய மஞ்செழுத்துலே தெளிந்து கொள்ளுமுண்மையே.

## 10. ஸ்ரீ மார்க்கபந்து ஸ்தோத்ரம்

*சம்போ மஹாதேவ தேவ, சிவசம்போ மஹாதேவ*
*தேவேச சம்போ, தேவேச சம்போ*
*சம்போ மஹாதேவ தேவ*

பாலாவ நம் ரத் கிரீடம் பால நேத்ரார் சிஷா
தக்த்த பஞ்சேஷுகீடம்
ஸுலாஹ தாராதி கூடம், சுத்த மர்த்தேந்து சூடம்
பஜே மார்க பந்தும் ( சம்போ)

அங்கே விராஜத் விஜத புஜங்கம் அப்ர கங்கரதரங்பிரா
மோத்த மாங்கம்
ஓம்கார வாடீ குரங்கம் ஸித்தஸம் ஸேவிதாங்க்ரீம்
பஜே மார்க் பந்தும் (சம்போ)

நித்யம் சிதானந்தரூபம் நின்ஹுதா சேஷ
லோகேச வைரிப்ர தாபம்
கார்த்தஸ்வ ராகேந்த்ர சாபம் க்ருத்தி வாஸம்பஜே
திவ்ய ஸன்மார்க பந்தும் (சம்போ)

கந்தர்ப்ப தர்ப்பக்ன மீசம் காலகண்டம் மஹேசம்

மஹாவ்யோம கேசம்
குந்தா பதந்தம் மஸுரேசம் கோடி சூர்யப்ரகாசம்
பஜே மார்கபந்தும் (சம்போ)

மந்தார பூதேரு தாரம் மந்த ராகேந்த்ர ஸாரம்
மஹா கௌர்ய தூரம்
ஸிந்தூர தூரப்ரசாரம் ஸிந்து ராஜாதி தீரம்
பஜே மார்கபந்தும் (சம்போ)

அப்பய்யஜ் வேந்த்ர கீதம் ஸ்தோத்ர ராஜம்
படேத்யஸ்து பக்தியா ப்ரயாணே
தஸ்யார்த்த ஸித்தம் விதத்தே மார்கமத்யே
பயம் ஸாது தோஷா மஹேச (சம்போ)

## 11. நடராஜ பத்து

மண்ணாதி பூதமொடு விண்ணாதி அண்டம் நீ
மறை நான்கின் அடிமுடியும் நீ
மதியும் நீ ரவியும் நீ புனலும் நீ அனலும் நீ
மண்டல மிரண்டேழும் நீ
பெண்ணும் நீ ஆணும் நீ பல்லுயிர்க் குயிரும் நீ
பிறவும் நீ ஒருவன் நீயே
பேதாதி பேதம் நீ பாதாதி கேசம் நீ
பெற்ற தாய் தந்தை நீயே
பொன்னும் நீ பொருளும் நீ இருளும் நீ ஒளியும் நீ
போதிக்க வந்த குருவும் நீ
புகழொணா கிரஹங்கள் ஒன்பதும் நீ யிந்த
புவனங்கள் பெற்றவனும் நீ
எண்ணரிய ஜீவகோடிகளீன்ற அப்பனே
என் குறைகள் யார்க் குரைப்பேன் (ஈசனே)

ஈசனே சிவகாமி நேசனே எனை ஈன்ற
தில்லை வாழ் நடராஜனே
மானாட மழுவாட மதியாட புனலாட
மங்கை சிவகாமியாட
மாலாட நூலாட மறையாட திரையாட
மறை தந்த பிரம்மனாட
கோனாட வானுலக கூட்டமெல்லாமாட
குஞ்சர முக்த்தனாட
குண்டல மிரண்டாட தண்டை புலியுடையாட
குழந்தை முருகேசனாட
ஞானசம்பந்தரோடு இந்திர பதினெட்டு முனி
அஷ்ட பாலகருமாட
நரைதும்பை யருகாட நந்தி வாகனமாட
நாட்டியப் பெண்களாட
வினையோட யுனைப்பாட யெனை நாடி யிதுவேளை
விரைந்தோடி ஆடி வருவாய் (ஈசனே)



கடலென்ற புவிமீதில் அலையென்ற வுருகொண்டு
கனவென்ற வாழ்வை நம்பி
காற்றென்ற மூவாசை மாருதச் சுழலிலே
கட்டுண்டு நித்த நித்தம்
உடலென்ற கும்பிக்கு உண்வென்ற யிரைதேடி
ஓயாமலிரவு பகலும்
உண்டுண்டு றுறங்குவதை கண்டதேயல்லாது
ஒருபய னடைந் திலேனே
தடமென்ற மிடி கரையில் பந்த பாசங்களெனுந்
தாபரம் பின்ன லிட்டு
தாயென்று சேயென்று நீயென்று நானென்றுத்
தமியேனை யிவ்வண்ணமாய்
இடையென்று கடைநின்று யேனென்று கேளா
திருப்பதுன் அழகாகுமோ (ஈசனே)

பம்பு சூனியமல்ல வைப்பல்ல மாரணந்
தம்பனம் வசிய மல்ல
பாதாள வஞ்சனம் ப்ரகாய்ப் பிரவேச
மதுவல்ல சால மல்ல
அம்புகுண்டுகள் விலகமொழியும் மந்திரமல்ல
ஆகாய குளிகை யல்ல
அன்போடு செய்கின்ற வாத மோடிக ளல்ல
அரிய மோகனமு மல்ல
கும்கமுனி மச்சமுனி சட்டமுனி பிரம்மரிஷி
கொங்கணர் புலிப் பாணியும்
கோரக்கர் வள்ளுவர் போகமுனி யிவரெலாங்
கூறிடும் வைத்ய மல்ல
என் மனதுன்னடி விட்டு நீங்காது நிலைநிற்க
ஏதுளது புகல வாய் (ஈசனே)

நொந்துவந்தே னென்று ஆயிரஞ் சொல்லியும்
செவியென்ன மந்த முண்டோ
நுட்பநெறி யறியாத பிள்ளளைப் பெற்றபின்
நோக்காத தந்தை யுண்டோ
சந்ததமுந் தஞ்சமென் றடியைப் பிடித்தபின்
தளராத நெஞ்ச முண்டோ
தந்திமுக னறுமுகன் இருபிள்ளை யில்லையோ
தந்தைநீ மலடு தானோ
விந்தையும் ஜாலமும் உன்னிடமிருக்குதே
வினை யொன்று மறிகிலேனே
வேதமும் சாஸ்திரமும் உன்னையே புகழுதே
வேடிக்கை யிதுவல்லவோ
இந்தவுல கீரேழு மேனளித்தாய் சொல்லு
யினி யுன்னை விடுவதில்லை (ஈசனே)

வழிகண்டு உன்னடியைத் துதியாத போதிலும்
வாஞ்சை யில்லாத போதிலும்
வாலாய மாய்க் கோயில் சுற்றாத போதிலும்
வஞ்சமே செய்த போதிலும்
மொழியதனை மோகனையில்லாமலே பாடினும்
மூர்க்கனே முகடாகினும்
மோசமே செய்யினும் தேசமே கவரினும்
முழுகாமியே யாயினும்
பழியெனக் கல்லவே தாய்தந்தைக் கல்லவோ
பார்த்தவர்கள் சொல்லார்களோ
பாரறிய மனைவிக்கு பாதியுட லீந்த நீ
பாலனைக் காக்கொணாதோ
எழில் பெரிய அண்டங்க ளடுக்கா யமைத்த நீ
என் குறைகள் தீர்த்தல் பெரிதோ (ஈசனே)

அன்னை தந்தைக ளென்னை ஈன்றதற் கழுவனோ
அறிவிலா ததற் கழுவனோ
அல்லாமல் நான்முகன் தன்னையே நோனோ
ஆசை மூன்றுக் கழுவனோ
முன்பிறப் பென்னவினை செய்தனென் றழுவனோ
என் மூட அறிவுக் கழுவனோ
முன்னிலென் வினைவந்து மூளுமென் றழுவனோ
முத்தி வருமென் றுணர்வனோ
தன்னைநொந் தழுவனோ உன்னைநொந் தழுவனோ
தவமென்ன வென் றழுவனோ
தையலர்க் கழுவனோ மெய்வளர்க் கழுவனோ
தரித்திர திசைக் கழுவனோ
இன்னு மென்ன பிறவி வருமோவென் றழுவனோ
எல்லா முரைக்க வருவாய் (ஈசனே)

காயாமுன் மரத்து பூபிஞ் சறுத்தேனோ
          கன்னியர்கள் பழி கொண்டேனோ
கடனென்று பொருள் பறித்தே வயிறெரித்தேனோ
          கிளை வழியில் முள் ளிட்டேனோ
தாயாருடன் பிறவிக் கென்ன வினை செய்தேனோ
          தந்த பொருளில்லை யென்றேனோ
தானென்று கர்வித்து கொலை களவு செய்தேனோ
          தவசிகளை யேசினேனோ
வாயாரப் பொய் சொல்லி வீண் பொருள் பறித்தேனோ
          வானவரைப் பழித் திட்டேனோ
வடிவு போல பிறரை சேர்க்கா தடித்தேனோ
          வந்தபின் என் செய்தேனோ
ஈயாத லோபி யேன்றே பெய ரெடுத்தேனோ
          எல்லாம் பொறுத்தருள்வாய்                    (ஈசனே)

தாயா ரிருந்தென்ன தந்தையு மிருந் தென்ன
          தன் பிறவி யுறவு கோடி
தனமலை குவித்தென்ன கனபெய ரெடுத்தன்ன
          தாரணியை யாண்டு மென்ன
சேயர் களிருந்தென்ன குருவா யிருந்தென்ன
          சிஷ்யர்க ளிருந்து மென்ன
சித்துபல கற்றேன்ன நித்தமும் விரதங்கள்
          செய்தென்ன நதிகளெல்லாம்
ஓயாது மூழ்கினும் என்ன பலன் எமனோலை
          ஒன்றை கண்டு தடுக்க
உதவுமோ யிது வெலாம் சந்தையுற வென்றுதான்
          உன்னிரு பாதம் பிடித்தேன்
யார்மீது உன்மன மிருந்தாலு முன் கடைக்கண்
          பார்வை யதுபோதுமே                    (ஈசனே)

இன்னமுஞ் சொல்லவோ உன் மனங் கல்லோ
இரும்போ பெரும் பாறையோ
இருசெவியு மந்தமோ கேளாது அந்தமோ
இதுவுனக் கழகு தானோ
என் அன்னை மோகமோ யிதுவென்ன சோபமோ
இதுவுமுன் செய்கை தானோ
இருபிள்ளை தாபமோ யார்மீது கோபமோ
ஆனாலும் நான் விடுவேனோ
உன்னைவிட் டெங்கு சென்றாலும் விழலாவேனோ
நான் உனை யடுத்துங் கெடுவேனோ
ஓகோவி துன்குற்ற மென்குற்ற மொன்றுமிலை
யுற்றுப்பார் பெற்ற வையா
என்குற்ற மாயினும் உன்குற்ற மாயினும்
இனியரு ளிக்க வருவாய் (ஈசனே)

சனிராத கேதுபுதன் சுக்கிரன் செவ்வாய்
குருசந்திரன் சூரிய னிவரை
சற்றெனக் குள்ளாக்கி ராசிபனி ரெண்டையும்
சமமாய் நிறுத்தி யுடனே
பனியொத்த நக்ஷத்திரங்க ளிருப்த்தேழும்
பக்குவப் படுத்திப பின்னால்
பகர்கின்ற கிரணங்கள் பதினொன்றையும் வெட்டிப்
பலரையும் அதட்டி என்முன்
கனி போலவே பேசி கெடுநினைவு நினைக்கின்ற
கசடர் களையும் கசக்கி
கர்த்தநின் தொண்டராம் தொண்டர்க்குத்
தொண்டர்கள் தொழுத னாக்கி
இனியவள மருவுசிறு மணவைமுனி சாமியெனை
யாள்வதினி யுன் கடன் காண். (ஈசனே)

திருச்சிற்றம்பலம்

# 12. ஈஸ்வர தியானம்

*சிவாய பரமேஸ்வராய சகிசேகராய நம ஓம்*
*பவாய குண சம்பவாய சிவதாண்டவாய நம ஓம்*

திருச்சிற்றம்பலம்

சிவாய நம ஓம் சிவாய நம
சிவாய நம ஓம் நமசிவாய
சிவாய நம ஓம் சிவாய நம
சிவாய நம ஓம் நமசிவாய

சிவ சிவ சிவ சிவ சிவாய நம ஓம்
ஹர ஹர ஹர ஹர நமசிவாய - சிவாய நம
ஓம் நமசிவாய ஓம் நமசிவாய
ஓம் நமசிவாய நமசிவாய - சிவாய நம

திருச்சிற்றம்பலம்

# 13. லிங்காஷ்டகம்

ப்ர ம முராரி ஸுரார்ச்சி லிங்கம்
நிர்மல பாஷித சோபித லிங்கம்
ஜன்மஜ துக்க விநாசன லிங்கம்
தத் ப்ரண்மாமி ஸ்தாசிவ லிங்கம்

தேவமுனி ப்ரவரார்ச்சித லிங்கம்
காமதஹம் கருணா கர லிங்கம்
ராவண தர்ப்ப விநாசன லிங்கம்
தத் ப்ரணமாமி ஸதாசிவ லிங்கம்

ஸர்வ ஸுகந்தி ஸுலேபித லிங்கம்
புத்தி விவர்த்தன காரண லிங்கம்
ஸித்த ஸுராஸுர வந்தித லிங்கம்
தத் ப்ரணமாமி ஸதாசிவ லிங்கம்

கனக மஹாமணி பூஷித லிங்கம்
பணிபதி வேஷ்டித சோபித லிங்கம்
தக்ஷ ஸுயக்ஞ விநாசன லிங்கம்
தத் ப்ரணமாமி ஸதாசிவ லிங்கம்

குங்கும சந்தன லேபித லிங்கம்
பங்கஜ ஹார ஸுசோபித லிங்கம்
ஸஞ்சித பாப விநாசன லிங்கம்
தத் ப்ரணமாமி ஸதாசிவ லிங்கம்

தேவ கணார்ச்சித ஸேவித லிங்கம்
பாவைர் பக்திய ரேவச லிங்கம்
தினதர கோடி ப்ரபாகர லிங்கம்
தத் ப்ரணமாதி ஸதாசிவ லிங்கம்

அஷ்ட தளோபரி வேஷ்டித லிங்கம்
ஸர்வ ஸமுத்பவ காரண லிங்கம்
அஷ்ட தரித்ர விநாசித லிங்கம்
தத் ப்ரணமாமி ஸதாசிவ லிங்கம்

ஸுரகுரு ஸுரவர பூஜீத லிங்கம்
ஸுரவண புஷ்ப ஸதார்ச்சித லிங்கம்
பராத்பரம் பரமாத்மக லிங்கம்
தத் ப்ரணமாமி ஸதாசிவ லிங்கம்

# 14. திரு ஆப்பனூர் தேவாரப் பதிகம்

## திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார்

முதல் திருமறை

பண் : குறிஞ்சி
88ம் பதிகம்

1. முற்றுஞ் சடைமுடிமேல் முதிரா இளம்பிறையான்
ஒற்றைப் படவரவமது கொண்டரைக் கணிந்தான்
செற்றமிழ் சீரானைத் திருவாப்பனூரனைப்
பற்றுமன முடையார் வினைபற்றறுப்பாரே.

2. குரவங்கமழ்குழ்லாள்குடி கொண்டு நின்று விண்ணோர்
விரவுந் திருமேனி விளங்கும் வளை யெற்றின்
அரவ மணிந்தானை பணியாப்பனூரானைப்
பரவு மனமுடையார் வினைபற்றறுப்பாரே.

3. முருகுவிரி குழலார் மனங்கொள் நங்கனைமுன்
பெரிது முனிந்துகந்தான் பெருமான்பெருங்காட்டின்
அரவ மணிந்தானை பணியாப்பனூரனைப்
பரவு மனமுடையார் வினைபற்றறுப்பாரே.

4. பிணியும் பிறப்பறுப்பான் பெருமான் பெருங்காட்டில்
துணியினிடை தாழச் சுடரேந்தி யாடுவான்
அணியும் புனலானையணியாப்ப னூரானைப்
பணியு மனமுடையார்வினை பற்றறுப்பாரே.

5. தகரமணி யருவித் தடமால் வரைசிலையா
நகரமொரு மூன்றும் நலங்குன்ற வென்றுகந்தான்
அகரமுதலானை யணியாப்பனூரானைப்
பகருமனமுடையார் வினைபற்றறுப்பாரே.

6. ஓடுந் திரிபுரங்களுடனே யுலந்த வியக்
காட திடமாகக் கனல்கொண்டு நின்றிரவில்
ஆடுந் தொழிலானை யணியாப்ப னூரானைப்
பாடும னமுடையார் வினைபற்றறுப்பாரே.

7. இயலும் விடையேறி யெரிகொள் மழுவீசிக்
கயிலினினைக் கண்ணு ளொருபாற் கலந்தாட
இயலுமிசையானை யொழிலாப்ப னூரானைப்
பயிலுமன முடையார் வினைபற்றறுப்பாரே.

8. கருக்குமணி மிடறன் கதநாக கச்சையினான்
உருக்கு மடியவரை யொளி வெண்பிறைசூடி
அரக்கன் திறலழித்தா னணியாப்ப னூரானைப்
பருக்குமன முடையவர் வினைபற்றறுப்பாரே.

9. கண்ணன் கடிக்கமல மலர்மேலினி துறையும்
அண்ணற் களப் பரிதாய் நின்றங்கடியார்மேல்
எண்ணில் வினைகளைவானெழிலாப்ப னூரானைப்
பண்ணின் இசை பகர்வார் வினை பற்றறுப்பாரே

10. செய்யக லிங்கத்தார் சிறு தட்டுடையார்கள்
பொய்யர் புறங்கூறப் புரிந்த வடியாரை
ஐயமகற்று வான் அணியாப்ப னூரானைப்
பையநினைந் தெழுவார் வினைபற்றறுப்பாரே.

11. அந்தண் புனல் வைகை யணிப்பனூர் மேய
சந்த மலர்க் கொன்றை சடைமேலுடையானை
நந்தியடி பரவும் நலஞான சம்பந்தன்
சந்த மிவை வல்லார் தடுமாற்றறுப்பாரே.

திருச்சிற்றம்பலம்

## திருஞான சம்பந்த சுவாமிகள் அருளியவை

### முதல் திருமுறை

தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண் மதிசூடிக்
காடுடைய சுடலைப் பொடி பூசியென் னுள்ளங்கவர் கள்வன்
ஏடுடையமல ரான் முனைநாட்பணிந் தேத்தவருள் செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

### மூன்றாம் திருமுறை

மங்கையர்க் கரசி வளவர் கோன் பாவை
வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டி மாதேவி
பணிசெய்து நாள்தொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநாயகனால்
வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற் கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவா யாவதும் இதுவே.

திருச்சிற்றம்பலம்

## 15. திருநாவுக்கரசு சுவாமிகள் அருளியவை

### நான்காம் திருமுறை

கூற்றாயின வாறு விலக்ககிலீர்
கொடுமை பல செய்தன நானறியேன்
ஏற்றாயடிக் கேயிர வும்கலும்
பிரியாது வணங்குவன் எப்பொழுதும்

# 20. சிவவாக்கியர் பாடல்

*ஓம் நம சிவாய ஓம் ஓம் நம சிவாய ஓம்*
*ஓம் நம சிவாய ஓம் ஓம் நம சிவாய ஓம்*

## சரியை விலக்கல்

1. ஓடி ஓடி ஓடி ஓடி உட்கலந்த ஜோதியை
நாடி நாடி நாடி நாடி நாட்களும் கழிந்துபோய்
வாடி வாடி வாடி வாடி மாண்டுபோன மாந்தர்காள்
கோடி கோடி கோடி கோடி எண்ணிறந்த கோடியே (ஓம்

## ஞான நிலை

2. என்னிலே இருந்த ஒன்றையான் அறிந்ததில்லையே
என்னிலே இருந்த ஒன்றையான் அறிந்து கொண்டபின்
என்னிலே இருந்த ஒன்றையாவர் காணவல்லரோ
என்னிலே இருந்திருந்து யான்உணர்ந்து கொண்டனே (ஓம்

## இதுவுமது

3. நானதேது நீயதேது நடுவில் நின்றதேதடா
கோனதேது குருவதேது கூறிடும் குலாமரே
ஆனதேது அழிவதேது அப்புறத்தில் அப்புறம்
ஈனதேது ராம ராம ராமவென்ற நாமமே (ஓம்

## யோக நிலை

4. அஞ்செழுத்தில் பிறந்து அஞ்செழுத்திலே வளர்த்து
அஞ்செழுத்தை ஓதுகின்ற பஞ்சபூத பாவிகாள்
அஞ்செழுத்திலோர் எழுத்து அறிந்துகூற வல்லரேல்
அஞ்சல் அஞ்சல் என்றுநாதன் அம்பலத்தில் ஆடுமே (ஓம்

## விராட் சொரூபம்

5. இடதுகண்கள் சந்திரன் வலது கண்கள் சூரியன்
இடக்கை சங்குசக்கரம் வலக்கை சூலமானமழு
எடுத்தபாதம் நீள்முடி எண்திசைக்கும் அப்புறம்
உடல்கலந்து நின்றமாயம் யாவர்காண வல்லரே (ஓம்

## தெய்வ சொருபம்

6. உருவுமல்ல வெளியுமல்ல ஒன்றைமேவி நின்றதல்ல
மருவுமல்ல கதாமல்ல மற்றதல்ல அற்றதல்ல
பெரியதல்ல சிறியதல்ல பேசுமாவி தானுமல்ல
அரியதாகி நின்றநேர்மை யாவர்காண வல்லரே (ஓம்)

## தேகநிலை

7. மண்கலங் கவிழ்ந்துபோது வைத்து அடுக்குவார்
வெண்கலங் கவிழந்தபோது வேணுமென்று பேணுவார்
நண்கலங் கவிழ்ந்தபோது நாறுமென்று போடுவார்
எணகலந்து நின்றமாயம் என்ன மாய மீசனே (ஓம்

## அட்சர நிலை

8. ஆனவஞ் செழுத்துளே அண்டமும் அகண்டமும்
ஆனவஞ் செழுத்துளே ஆதியான மூவரும்
ஆனவஞ் செழுத்துளே அகாரமும் மகாரமும்
ஆனவஞ் செழுத்துளே அடங்கலாவ லுற்றதே (ஓம்

## இதுவுமது

9. நினைப்பதொன்று கண்டிலேன் நீயலாது வேறிலை
நினைப்புமாய் மறப்புமாய் நின்றமாய்கை மாய்கையை
அனைத்துமாய் அகண்டமாய் அனாதிமுன் அனாதியாய்
எனக்குள்நீ உனக்குள்நான் இருக்குமாறு எங்ஙனே (ஓம்

10. பண்டுநான் பறித்தெறிந்த பன்மலர்கள் எத்தனை
பாழிலே செபித்துவிட்ட மந்திரங்கள் எத்தனை
மிண்டராய்த் திரிந்தபோது இரைத்தநீர்கள் எத்தனை
மீளவும் சிவாலயங்கள் சூழவந்தது எத்தனை (ஓம்

### ஞானம்

11. அம்பலத்தை அம்புகொண்டு அசங்கென்றால் அசங்குமோ
கம்பமற்ற பாற்கடல் கலங்கென்றால் கலங்குமோ
இன்பமற்ற யோகியை இருளும்வந் தணுகுமோ
செம்பொன் னம்பலத்துளே தெளிந்ததே சிவாயமே (ஓம்

### அட்சர நிலை

12. அவ்வெனும் எழுத்தினால் அகண்டம் ஏழுமாகினாய்
உவ்வேனும் எழுத்தினால் உருத்தரித்த நின்றனை
மவ்வெனும் எழுத்தினால் மயங்கினார்கள் வையகம்
அவ்வும் உவ்வும் மவ்வுமாய் அமர்ந்ததே சிவாயமே (ஓம்

### பிரணவம்

13. மூன்று மண்டலத்திலும் முட்டிநின்ற தூணிலும்
நான்றபாம்பின் வாயினும் நவின்றெழுந்த அட்சரம்
ஈன்றதாயும் அப்பரும் எடுத்துரைத்த மந்திரம்
தோன்றுமோர் எழுத்துளே சொல்ல வெங்குதிலையே (ஓம்

### பஞ்சாட்சர மகிமை

14. நமச்சிவாய அஞ்செழுத்தும் நிற்குமே நிலைகளும்
நமச்சிவாய மஞ்சுதஞ்சும்பு ராணமான மாய்கையை
நமச்சிவாய அஞ்செழத்தும் நம்முள்ளே இருக்கவே
நமச்சிவாய உண்மையை நன்குரைசெய் நாதனே (ஓம்

